# சிவாஜி

ஞாயிறு வெளியீடு

SHIVAJI
TAMIL WEEKLY
28th year
of Publication
*
8—9—1963

அரசியல், தொழில் வள, சமுதாய நல, கலை, இலக்கிய வார இதழ் ஆசிரியர்: திருலோகசீதாராம்


# தொழிற் கல்வியில் சேதாரம்

## காலத்தையும் பொருளையும் வீணாக்கும் இன்றைய முறை முற்றிலும் மாறவேண்டு மென்கிறார் தொழிலதிபர்

## ஜி. டி. நாயுடு

★



ஜி. டி. நாயுடு அவர்கள் ஆறு கல்வி நிலையங்களுக்கு பஸ்கள் நன்கொடை வழங்கியபோது ... ...

பாலிடெக்னிக்குகளில் 3 வருஷமும் எஞ்சினீயரிங் காலேஜ்களில் 4 வருஷமும் என்று இப்பொழுது இருந்து வரும் கல்வித் திட்டத்தை மாற்றியமைக்க வேண்டு மென்பது, கோவை தொழிலதிபர் ஜி. டி. நாயுடு அவர்களின் கருத்து. எண்ணற்ற விடுமுறை நாட்கள், அன்றாடம் மிகக் குறைந்த வகுப்பு நேரம் இவற்றால் வீண் பொழுது போக்குவதற்குத்தான் மாணவர்களுக்கு வாய்ப்புக் கிடைக்கிறது. இவர்களைக் கவரக் கூடிய சினிமா, பொழுது போக்கு விளையாட்டுக்கள் போன்றவை இருக்கின்றன. எனவே கால அளவை மிகவும் குறைத்து மாணவர்களின் இளமையும் பெற்றோர்களின் பணமும் விரயமாகாமல் தடுப்பது மிகச் சிறந்த தேசீய லாபமாக இருக்கும் என்று அவர் பல வருடங்களாகச் சொல்லி வருகிறார்.

பாலிடெக்னிக்குகளில் மூன்று வருஷம் கற்றுத் தேர்ந்த பிறகும் ஒரு மாணவன் நேரே ஒரு தொழிலில் ஈடுபட முடியாமல் மேலும் நடைமுறைப் பயிற்சிகள் பெற வேண்டியவனாகிறான். இந்தக் கல்வியை 6 வாரங்களில் சாதாரண அறிவு பெற்ற ஒரு மாணவனுக்கு கற்பித்து அவனைத் திறமையுடையவனாகச் செய்ய முடியுமென்பதில் இவருக்கு நம்பிக்கையிருக்கிறது. இதை மற்றவர்களுக்கு அவர் சிறந்த முறையில் சென்ற 15 ஆண்டுகளாக நிரூபித்துக் காட்டியும் வருகிறார்.

ஆண்டுதோறும் கோடை காலத்தில் 6 வாரங்கள் தமது தொழிற்சாலையில் இவர் வகுப்புக்கள் நடத்தி, எலெக்ட்ரிக், ரேடியோ, மோட்டார் வாகனம் ஆகிய பொறி இயல் துறைகளில் தனித்தனியாக மாணவர்களைத் தயாரிக்கிறார். இந்த ஆறு வாரப் பயிற்சி பெற்ற ஒரு மாணவன், பாலிடெக்னிக் தேர்ச்சி பெற்ற மாணவனைக் காட்டிலும் நல்ல பொறி இயல் நடைமுறை அறிவும் ஆற்றலும் பெற்றவனாக விளங்குவதைக் கண்டு பல அறிஞர்களும் அமைச்சர்களும் பாராட்டியிருக்கிறார்கள். எனினும், இவருடைய குறுகிய கால கல்வி முறையை ஏற்று இதர இடங்களிலும் அதை நடத்திப் பார்க்கும் துணிவோ, மனமோ யாருக்குமில்லை. ஒரு சிலர், இந்த முறையை ஜி. டி. நாயுடு ஒருவர் தான் சிறப்பாக நடத்த முடியுமென்றும், துரதிர்ஷ்ட வசமாக நாட்டில் ஒரே ஒரு ஜி. டி. நாயுடு தானே இருக்கிறார் என்றும் கூறி அவர்களும் ஒதுங்கிக் கொண்டனர்.

தமது ஆறுவாரப் பயிற்சியை ஏற்கா விட்டாலும் பொறி இயற் கல்லூரிகளில் இப்பொழுது அமுலிலுள்ள கால வரையறையைக் குறைக்கவாவது செய்யலாமே என்று அவர் கேட்கிறார். அது மட்டுமின்றி 4 வருடங்கள் முழுதும் படித்துத் தேர்ச்சி பெற்றவர்களுக்கு மட்டும் பட்டம் வழங்குவது என்றுள்ள முறையையும் மாற்றி அமைக்க வேண்டு மென்பது அவர் கருத்து. ஏனென்றால் 4 வருடங்கள் செலவிட்ட பின்னர் பரிட்சையில் ஒரு மாணவன் தேர்ச்சி பெறுமல் போய் விட்டால் அத்தனை வருஷங்களும் அதற்கான பெரும் செலவும் வீணாகி, ஒரு பயனுமில்லாமல் போய் விடுகிறது. ஓரிரு வருடங்கள் படித்த மாணவன் இடையில் வேறு பல காரணங்களால் தொடர்ந்து படிக்க முடியாமற் போனாலும் அந்த அளவுக்கு அவன் பட்டபாடும் செலவிட்ட பணமும் நஷ்டமாகி விடுகிறது. அவன் கற்றுக் கொண்ட ஓரிரண்டு வருடம் பொறி இயல் திறமைக்கு எந்த விதமான அத்தாட்சியும் அங்கீகாரமும் இல்லாமல் அவனை அனாதையாக்கி விடுவது அவனுக்கு மட்டுமல்லாமல், நாட்டின் பொதுச் செல்வத்துக்கே அது ஒரு வீண் நஷ்டமல்லவா என்று அவர் கேட்கிறார். இதற்கு அவர் ஒரு பரிகாரமும் கூறுகிறார். இஞ்சினீயரிங் கல்லூரிகள், பாலிடெக்னிக்குகளில், தொடக்கத்தில் எல்லாவித தொழில் நுட்ப அடிப்படைச் சாத்திரங்களையும் எல்லா மாணவர்களுக்கும் சொல்லிக் கொடுப்பது வீண் வேலை. மாணவர்கள் எந்தத் துறையில் சிறப்பாகப் பயிற்சி பெற விரும்புகிறார்களோ அந்தக் கல்வியையே ஆரம்பத்திலிருந்து நுட்பமாகச் சொல்லிக் கொடுக்கலாம்.

ஒரு வருடம் முடிந்தவுடன் நடைபெறும் தேர்வில் வெற்றி பெறும் மாணவர்களுக்கு ஒரு சர்டிபிகேட் வழங்க வேண்டும். அந்த மாணவன் தொடர்ந்து இரண்டாம் ஆண்டும் படித்த பிறகு அந்த ஆண்டு இறுதித் தேர்வில் வெற்றி பெற முடியாமலோ வேறு காரணங்களால் தொடர்ந்து படிக்க முடியாமலோ நின்று கொண்டால், முன்பு அவன் பெற்ற முதலாண்டு சர்டிபிகேட்டு அவனுக்குப் பயன்படும். அதற்குத் தகுந்த வேலைக்குப் போய் அவன் சமாளித்துக் கொள்ளலாம்.

இதே போல் இரண்டாம் ஆண்டுத் தேர்வுக்கு ஒரு டிப்ளமாவும், மூன்றாண்டு இறுதியில் பட்டமும் கொடுத்து விடவேண்டும். பட்ட தேர்வு முடிந்து அதில் வெற்றி பெற்ற பின்னரே, தொடர்ந்து ஆராய்ச்சிக் கல்வியை விரும்பும் மாணவர்களுக்கு அந்த சந்தர்ப்பம் கொடுக்கலாம்.

இப்படிச் செய்வதன் மூலம், எத்தனை வருஷம் பொறி இயல் கல்வி கற்றிருந்தாலும் அந்த அளவுக்கு ஒரு தகுதியும் பயனும் ஒரு மாணவனுக்குக்கிடைக்கும். தவிர எல்லா மாணவர்களையும் பட்டதாரிகளாக்கி விட்டு அவர்களுக்கு வேலையில்லாமல் அவதிப்பட வேண்டியதில்லை. படிப்பை மூன்று கட்டங்களாகச் செய்

[3-ம் பக்கம் பார்க்க]

### மறைந்த மாஜி பிரிட்டிஷ் அமைச்சர்

# ஜான் ஸ்ட்ரேசி

61 ஆண்டுகள் நிரம்பிய ஜான் ஸ்ட்ரேசி என்பவர் அண்மையில் காலமான தகவலை உலகப் பத்திரிகைகள் யாவும் பிரசுரித்திருந்தன. இவர் பிரிட்டிஷ் அரசாங்கத்தில் ஒரு காலத்தில் அமைச்சர் பதவியிலிருந்தவர். தொழிலாளர் கட்சியைச் சேர்ந்தவராகிய இவர் பல சிறந்த அரசியலையொட்டிய நூல்களை இயற்றி வெளியிட்டிருக்கிறார். இவருடைய குடும்பம் உயர் மத்தியதர வகுப்பைச் சேர்ந்தது. இவ்வகை குடும்பத்தைச் சேர்ந்த பிரிட்டிஷர்கள் பிரிட்டனிலும் பிரிட்டிஷ் சாம்ராஜ்ஜியத்திலும், பல்கலைக் கழகங்களிலும், பள்ளிகளிலும் நிர்வாகப் பொறுப்புகள் ஏந்தி பணியாற்றியிருக்கிறார்கள். ஸ்ட்ரேசி இளமையில் ஈடன் பள்ளியில் கல்வி பயின்று பின்னர் ஆக்ஸ்போர்டு பல்கலைக் கழகத்தில்தான் உயர்தரக் கல்வியை படித்துப் பூர்த்தி செய்து கொண்டார். ஆக்ஸ்போர்டில் இன்னும் புகழுடன் விளங்கும் சில பிரபல கல்லூரிகளில் ஒன்றாகிய மாக்டலின் கல்லூரியில் இவர் ஓர் சிறந்த மாணாக்கராகத் திகழ்ந்தார். இவருடைய தகப்பனார் "ஸ்பெக்டேட்டர்" என்னும் பத்திரிகையின் ஆசிரியராகப் பணியாற்றியவர்.

ஸ்ட்ரேசி பள்ளி மாணாக்கராக இருக்குங்கால் முதலாவது உலகப போர் துவங்கிய சமயம், போரின் விளைவால் பல துறைகளில் மக்களின் வாழ்க்கை இடர் பட்டது. கட்டாய இராணுவ சேவை அமுலுக்கு வந்து ஸ்ட்ரேசியின் சக மாணாக்கர்கள் ஏராளமாகப் போர்க்களத்துக்குச் சென்று அங்கு உயிர் துறந்தார்கள். இந்நிகழ்ச்சி ஸ்ட்ரேசியின் மன நிம்மதியை ஓர் பெருத்த அளவுக்கு பாதித்தது. போர் முடிவுற்றதும் மீண்டும் பல்கலைக் கழகப் படிப்பைப் பூர்த்தி செய்வதற்கும் போர் முனையிலிருந்து திரும்பிய மாணாக்கர்கள் கல்லூரிகளில் கூடியதும் அவர்களுடைய நெருங்கிய பழக்கம ஸ்ட்ரேசியுக்கு சோஷலிஸத்தில் மனத்தை நாட ஊக்குவித்தது. 1920 இல் இவர் ஓர் சோஷலிஸ்டாக மாறினார். 1924 இல் பாராளுமன்றத் தேர்தலில் நின்று இவர் தோல்வியுற்றார். ஆனால் 1929 இல் இவர் மீண்டும் தேர்தலில் போட்டியிட்டு வெற்றி பெற்றார். தேர்தல் அபேக்ஷகராக நிற்பதற்கு முன்பு இவருக்கு ரஷ்யாவை சுற்றிப் பார்ப்பதற்கு ஓர் வாய்ப்புக் கிட்டியது.

இவர் விரைவில் கம்யூனிஸத்தினால் வசீகரப்பட்டு பிரபல நூல் வெளியிடுவோராகிய வக்டர் கோலான்ஸ் என்பவருடனும், பேராசிரியர் ஹெரால்டு லாங்கி என்பவருடனும் கூடி இயங்கி இடது சாரி புத்தக சங்கம் ஒன்றை வளர்த்தார். இவருடைய ஆர்வம் கம்யூனிஸத்தில் அளவு கடந்து பெருகிய போதிலும், கம்யூனிஸக் கட்சியுடன் நெருங்கி இவர் அளவளாவிய பொழுதும் கூட கட்சியின் அங்கத்தினராக இயங்க ஒரு பொழுதும் இவர் முன்வரவில்லை. அவ்வமயம் இவர் பிரிட்டனின் அரசியல் பிரச்சனைகளை சோவியட் கண் கொண்டு நோக்கி எழுதி வெளியிட்ட சில நூல்கள் அக்காலத்தில் இவர் கொண்ட மனப்பான்மைக்கு எடுத்துக்காட்டாகத் திகழ்கின்றன.

1939 இல் நாஸி ஜெர்மனியும் சோவியட்டும் மேற்கொண்ட உடன்படிக்கை ஸ்ட்ரேசியிக்கும், அவரைப் பின்பற்றுபவர்களுக்கும் ஓர் பெரிய அதிர்ச்சியை விளைவித்தது. இவ்வதிர்ச்சி இவரை இதுகாரும் ரஷ்யாவைப் பற்றிக் கொண்டிருந்த கருத்துக்களை திருத்திக் கொள்ளும்படி செய்தது என்று சொல்லப்படுகிறது. இரண்டாவது உலக மகாயுத்தம் துவங்கிய சமயம் இவர் ஆகாய விமானப் படையில் தரையில் இயங்கும் பகுதியில் அமர்ந்து சில காலம் பணியாற்றினார். பின்னர் போர் விளம்பர இலாகாவுக்கு இவர் மாற்றப்பட்டார். அக்காலத்தில் வானொலி மூலம் இவர் இயற்றிய சொற்பொழிவுகளை இன்று தேடியெடுத்து நூல் வடிவில் பிரசுரித்தால் அது இரண்டாவது உலக மகாயுத்த ஆரம்ப காலத்தில் நாட்டில் மக்களினிடையே பொங்கி யெழுந்த உணர்ச்சி வெள்ளம் எத்தகையது என்பதை நன்கு விளக்கிக் காட்டும் என்று சொல்லப்படுகிறது.

1945 ஆம் ஆண்டு தொழிலாளர் கட்சி பொதுத் தேர்தலில் வெற்றி பெற்று நாட்டு நிர்வாகத்தில் பங்கு கொள்ள முன் வந்த பொழுது, ஸ்ட்ரேசி உணவு இலாகா அமைச்சர் பதவியை ஏற்றார். இவர் பதவியில் இருக்குங்கால் நிர்வாகத் துறையில் இவருடைய திட்டங்கள் சில தோல்வியுற்றன. உதாரணமாக, கிழக்கு ஆப்பிரிக்காவில் லக்ஷக்கணக்கான ஏகர் விஸ்தீர்ணத்தில் நிலக்கடலை பயிற் செய்து எண்ணெய் உற்பத்தியை அபிவிருத்தி செய்யக்கையாண்ட ஓர் திட்டம் அவசரத்தினாலும், நிர்வாகப் பிழைகளினாலும், அனுபவக் குறைவினாலும் பெருத்த நஷ்டத்தை விளைவித்தது. இவ்வகையான பல தோல்விகள் தொழிலாளர் கட்சிக்கு அடுத்த பொதுத் தேர்தலில் வெற்றி பெற உதவவில்லை.

1951 ஆம் ஆண்டு நடந்த பொதுத் தேர்தலில் தொழிலாளர் கட்சி தோல்வியுற்று அன்றிருந்து இன்று வரை இக்கட்சியின் அரசியல், இருள் சூழ்ந்து காணப்படுகிறது.

ஸ்ட்ரேசி தனது பிற்காலத்தில் தனது கூர்ந்த புத்தியை அணு சக்தியைப் பற்றியும், யுத்த தந்திரத்திற்கு அவரது உபயோகத்தைப் பற்றியும் கற்கப் பயன்படுத்தினார். இதைப் பற்றி பல கருத்தரங்குகளில் இவர் ஆற்றிய சொற்பொழிவுகளிலும், விவாதங்களிலும், இராணுவ தளபதிகள், விஞ்ஞானிகள், அரசியல் வாதிகள், எழுத்தாளர்கள் முதலியவர்கள் பங்கு கொண்டார்கள். ஐரோப்பியப் பொதுப் சந்தையில் பிரிட்டன் பங்கு கொள்வதைப் பற்றி ஏற்பட்ட பிரச்சனையினால் தொழிலாளர் கட்சியில் பிளவு ஏற்பட்ட பொழுது இவர் தன் நிலையில் மாறுதல் கொள்ளாமல் ஐரோப்பாவினுடன் பிரிட்டன் ஐக்கியத்தையும், நல்லுறவையும் வளர்க்க வேண்டுமென்றால் பொதுச் சந்தையில் பங்கு கொள்ளல் வேண்டுமென்று வற்புறுத்தினார். இவருக்கு எதிர்ப்புக் காட்டிய ஹியூ கெயிட்ஸ்கெல் என்பவர் தலைமையில் மிகவும் வலிமையுடன் இயங்கியது. ஆனால் இவ்வெதிர்ப்பு இவர் கொண்ட நம்பிக்கையைத் தளரவிடவில்லை. சமீப காலத்தில் அரசியலில் இவருடைய அந்தஸ்து மேலும், மேலும் ஓங்கி வளர்ந்து கொண்டு வந்திருந்தது. இவருடைய அகால மரணத்தின் விளைவால் அரசியல் உலகில் ஏற்பட்ட நஷ்டத்தைக் காட்டிலும் சிந்தனையாளர் உலகில் தான் அதிகமாக விளைந்திருக்கிறது என்று சொல்லப்படுகிறது. இக்கூற்று முற்றிலும் உண்மையே.

★

## காட்டு ரப்பரின் இலை

### வரண்ட பூமிகளுக்கு நல்ல உரம்

காட்டு ரப்பரின் இலைகள் செஸ்பேனியா போலவே நல்லதோர் பசுந்தாள் உரம் என்று கேரளத்திலிருந்து தகவல் கிடைத்திருக்கிறது. செடிக்கு நான்கு வயது அல்லது ஐந்து வயதாகியிருக்கும் போது அதிலிருந்து ரப்பர்பாலும் வடிக்கலாம்.

காட்டு ரப்பர் விரைவில் பரவி வளரும் நடுத்தரப் பரிமாண முள்ள மரம். பாலக்காடு, கோழிக்கோடு, திருவனந்தரம் போன்ற ஊர்களில் வேலிப்பயிராக இதைப் பயிரிடுகிறார்கள். ஆடு மாடு இதை தின்பதில்லை.

பசுந்தாள் உரத்தின் பொருட்டு ஆண்டுக்கு இரண்டு தடவைகள் தழை வெட்டிக் கொள்ளலாம். தடவைக்கு 50 ராத்தல் இலை மரம் ஒன்றுக்கு கிடைக்கும் வீடுகளைச்சுற்றி எளிதில் வேலியாக இதை வளர்க்கலாம்.

★

## கத்தரி பூச்சிகள் டி.டி.டி.யைப் பயன்படுத்தலாம்

கத்தரிக்கு வரும் சந்நியாசி வண்டு தத்துப் பூச்சி, பச்சைப் பூச்சி இவைகள் கத்தரி நாற்றுகள் செடிகள் இரண்டையும் தாக்கி நஷ்டம் விளைவிக்கின்றன. டி. டி. டி. ஐ பயன்படுத்தி இவைகளைக் கட்டுப்படுத்தலாம் என்று மஹாராஷ்டிர மாநிலத்தில் உள்ள பூனாவில் உள்ள விவசாயக் கல்லூரியில் கண்டு பிடித்திருக்கிறார்கள்.

இரண்டு சதவிகித டி. டி. டி. பொடியைத் தூவலாம். அல்லது 50 சதவிகித கரையும் டி. டி. டி. ஒரு அவுன்ஸை அரை காலன் தண்ணீரில் கரைத்துக் கொண்டு அடிக்கவும்.

காய் துளைக்கும் புழு, தண்டு துளைக்கும் புழு இவைகளைப் பிடித்துக் கொன்று விட வேண்டும். கோடையில் விதைப்பை காலதாமதம் செய்து விதைத்தால் தண்டு துளைப்பான் வராமல் காக்கலாம்.

★

## மிளகு பொல்லு வண்டைக் கட்டுப் படுத்த டி. டி. டி.

மிளகைத் தாக்கும் பொல்லுவண்டை குறைந்த செலவில் கட்டுப்படுத்தலாம் என்று கேரள மாநில தாலிப்ரம்பா மிளகு ஆராய்ச்சி நிலையத்தார் கண்டு பிடித்திருக்கிறார்கள்.

தென்மேற்கு மழை வந்ததும் பொல்லூ கொடிகளைத் தாக்குகிறது. தாக்கப்பட்ட கொடிகளை வண்டு தாக்கலிலிருந்து மீட்க 0·2 சதவிகித டி. டி. டி. ஐ கொடிகளுக்கு அடிக்கவும். பாதிக்கப்பட்ட கொடிகளின் காய்கள் கருத்து சுருங்கி சாவியாக இருக்கும்.

காய்கள் வைத்ததும் மருந்தடிக்க வேண்டும். முதல் முதலாக காய்களுக்கு மருந்தடிக்க ஜூலை கடைசி வாரமோ ஆகஸ்டு முதல் வாரமோ சிறந்தது. பிறகு மாதம் ஒரு முறையடிக்கவும். நல்ல பலன் தர மேகமூட்டமில்லாத, தூறல் இல்லாத காலை வேளையில் செவ்வையாக மருந்தடிக்க வேண்டும்.

ஒரு ராத்தல் 50 சதவிகித கரையக் கூடிய டி. டி. டி. ஐ 25 காலன் தண்ணீரில் கரைத்துக் கொள்ளவும். இதில் ஒரு காலன் மூன்று நான்கு கொடிகளுக்கு (அவைகளின் வளர்ச்சிக்கு தகுந்தாற்போல்) போதுமானது. ஒரு ஏக்கரில் உள்ள மிளகு கொடிகளுக்கு அடிக்க மூன்றிலிருந்து ஐந்து ராத்தல் டி. டி. டி. போதுமானது.

★

வளர்ச்சி இல்லையென்றால்

வன்மையும் இல்லை.

# காசநோய் ஒழிப்பு ஆராய்ச்சி

இந்தியாவுக்கு சுகாதாரத் துறையிலே மிகக் கொடிய பிரச்னையாக இருப்பது காசநோய். இந்த நோயை ஒழிப்பதற்குப் புத்தம் புதிய முறைகளைத் தெரிந்து கொண்டு வருகிறார் டாக்டர் பி. ஆர். ஜெ. கங்காதரம்.

டாக்டர் கங்காதரம் நுண்ணுயிர் இயல் விஞ்ஞானி. அமெரிக்காவில் தேசிய யூதர் மருத்துவ மனையில் (என். ஜே. எச். என்பது இதன் சுருக்கமான பெயர்) அவர் இரண்டாண்டுக் காலம் இது பற்றி ஆராய்ச்சிப் படிப்பு படித்துள்ளார். ஆகஸ்ட் 21-ம் தேதி அவருடைய படிப்பு முடிவடைந்தது.

மேலே கூறப்பட்ட மருத்துவ மனை உலகப் பிரசித்தமானது. இது நெஞ்சு நோய் ஆராய்ச்சி சிகிச்சை நிலையமாகும். இந்த மருத்துவ மனையில் தம் துறையில் பயிற்சி பெற்ற முதலாவது இந்தியர் டாக்டர் கங்காதரன் தான்.

சென்னைக்குத் தாம் திரும்பிச் செல்வதை எதிர்பார்த்துக் கொண்டிருப்பதாக டாக்டர் கங்காதரன் சொன்னார். சென்னையில் காசநோய் சிகிச்சை நிலையத்தி (டி. ஸி. ஸி) அவர் ஸீனியர் ஆராய்ச்சி அதிகாரியாக இருந்திருக்கிறார்.

நான் கற்றதை மற்றவர்களுக்கும் சொல்லிக் கொடுக்க விரும்புகிறேன், எனக்குக் கிடைத்தது அரியதோர் வாய்ப்பு என்றார் அவர்.

காசநோய் சிகிச்சையில் என் ஜே எச் மிகவும் முன்னேறி இருக்கிறது என்றும் உலகிலேயே அதுதான் முன்னணியில் இருக்கிறது என்றும் கூறுகிறார் டாக்டர் கங்காதரம். புதுபுது முறைகளை உலகிலேயே முதன் முதலில் இந்த மருத்துவ மனைதான் கையாளுகிறதென்றார் அவர். ஜனாதிபதி கென்னடி இந்த மருத்துவ மனையைப் பாராட்டிப் பேசுகையில் சொன்னதாவது: "நோய்களை ஒழிப்பதில் டென்வரில் இருக்கும் தேசிய யூத மருத்துவ மனையின் சாதனைகள் மிக அற்புதமாகும். இந்தச் சாதனைகளுக்கு ஒப்ப இருப்பது, இந்த மருத்துவமனை சமய, இனவேறுபாடின்றி நோயுற்றோருக்கு கருணை உள்ளம் கொண்டு சிகிச்சை செய்வது தான்.

சென்ற இரண்டு ஆண்டுக் காலமாக டாக்டர் கங்காதரம் டாக்டர் கார்ட்னர் மிட்டில்புரூக் என்பவருடனும் டாக்டர் மாரிஸ் எல். கோ. என்பவருடனும் வேலை செய்து வந்திருக்கிறார். டாக்டர் மிட்டல்புரூக் என்ஜேஎச் ஆராய்ச்சி ஆய்வுக்கூடத்தின் டைரக்டர்; டாக்டர் கோ துணை டைரக்டர். இவர்கள் செய்த ஆராய்ச்சியின் பெரும் பகுதியும் மருந்தின் எதிர்ப்பு வலிமையைப் பற்றியே இருந்தது. சிகிச்சையில் பயன்படுத்தப்பட்ட மருந்துக்கு சில நோயாளிகளின் காசநோய் கிருமிகள் மசிவதில்லை. மருந்து இவற்றை ஒன்றுமே செய்ய முடியவில்லை. எனவே அந்தந்த நோயாளிகளின் தேவைக்கேற்றதான மருந்துகளைத் தயாரிப்பதில் இவர்கள் ஆராய்ச்சி இருந்தது.

இந்தியாவிலும் சரி, வளர்ச்சி பெற்றுவரும் நாடுகள் அனைவற்றிலும் சரி, இத்தகைய பணியின் முக்கியத்துவத்தை டாக்டர் கங்காதரம் ஒரு சிறப்புக் கட்டுரையில் வற்புறுத்தியிருந்தார். இக்கட்டுரையை அவர் அண்மையில் டென்வரில் நடைபெற்ற தேசிய காசநோய் சங்கக் கூட்டத்தில் வாசித்தார்.

எந்த மருந்துக்கும் மசியாத காசநோய் உலகம் முழுவதற்கும் இருக்கும் ஒரு ஆபத்தான பிரச்னையாகும் என்கிறார் டாக்டர் கங்காதரம். மலிவானதும், சுலபமானதும் விரைவில் உபயோகிக்கக் கூடியதும் உடனடியாகப் பயன்தரக்கூடியதுமான நுண்ணுயிர் இயல் முறைகளைக் கண்டுபிடிப்பதும், காசநோய்க் கிருமிகளை ஒழிக்கக் கூடியதுமான மலிவான மருந்துகளைத் தயாரிப்பதும் பாதகமான வாழ்க்கை நிலைகளிலும் காசநோய்களைக் கட்டுப்படுத்தும் நடைமுறைகளை அறிவதும் மிக மிக அவசியம் என்கிறார் டாக்டர் கங்காதரம்.

டாக்டர் கங்காதரம் படித்த இரண்டாண்டுக் காலத்தில் அவர் 6 விஞ்ஞானக் கட்டுரைகளை எழுதியிருக்கிறார் என்றார் டாக்டர் மிட்டில்புரூக். இதனால் அவர் உலக விஞ்ஞானத்திற்குச் சேவைசெய்திருக்கிறார். மூன்று கட்டுரைகள் அமெரிக்கப் பத்திரிகைகளிலும் இரண்டு பிரிட்டிஷ் பத்திரிகைகளிலும் வெளிவந்துள்ளன என்றும் கடைசி கட்டுரை இன்னும் வெளியிடப்படவில்லை என்றும் அவர் சொன்னார்.

அமெரிக்க அரசாங்கம் தனது உபகாரச் சம்பளத் திட்டத்தின் மூலம் இந்தியாவின் தலைசிறந்த நுண்ணுயிர் இயல் விஞ்ஞானிகளில் ஒருவர் இங்கு வந்து வேலை செய்ய வாய்ப்பு அளித்தது மிக முக்கியமென நாங்கள் கருதுகிறோம்.

தேசிய யூதர் மருத்துவ மனையும் அவருக்கு எல்லா வசதிகளையும் அளித்தது மிக முக்கியமானதேயாகும். இந்த நல்ல காரியத்தில் பங்கு கொள்ள அமெரிக்க மக்களுக்கு இரட்டை வாய்ப்புக் கிடைத்திருக்கிறது. அவர்களுடைய வரியும் மருத்துவ மனைக்கு வழங்கிய நன்கொடைகள்தான் இந்த இரட்டை வாய்ப்பு என்றார் டாக்டர் மிட்டில்புரூக்.

"டாக்டர் கங்காதரம் எங்களிடம் வந்தது எங்களுக்கு மிக மகிழ்ச்சியே. அவரை எங்களுடன் வைத்திருக்கவே நாங்கள் விரும்புகிறோம். ஆனால் அவருடைய நாட்டிற்கு அவர் எவ்வளவு அவசியமாக இருக்கிறார் என்பதையும், தம் மக்களுக்கு உதவி செய்ய அவர் எவ்வளவு ஆவலுள்ளவராக இருக்கிறார் என்பதையும் நாங்கள் உணர்ந்துள்ளோம்'' என்றார்.

டாக்டர் கங்காதரனின் மனைவியார் சகுந்தலா வனப்பும் படிப்பும் உள்ளவர். தமது மூன்று வயது மகள் காமேசுவரியுடன் அவர் ஜூன் மாதம் டென்வர் பல்கலைக் கழகத்தில் அவர் வண்ணச் சித்திரம் பயின்றார். இந்த தம்பதிகளுக்கு இரண்டு மகன்களும் இருக்கின்றனர்.

★

## கடலில் வாழும் பயங்கர ஜந்து

40 அடி நீளமுள்ள ஒரு கடலரக்கனைத் தேடி அமெரிக்க அரசாங்க விஞ்ஞானிகளும், கடலில் மூழ்குபவர்களும் நியூயார்க்கிலிருந்து கிளம்பியுள்ளனர்.

மீன், காட்டு விலங்கு ஆராய்ச்சி நிலையத்தின் நெறியாளரான டாக்டர் லயனல் வல்போர்டு கடந்த மாதம் அட்லாண்டிக் சமுத்திரத்தி 25 அடி நீளமுள்ள "அரக்கனைக்'' கண்டதாகக் கூறினார். அவர் அதைக் கண்டபோது இதர கடல்வாழ் உயிரின ஆராய்ச்சி வல்லுனர்களும் இருந்தனர்

"ஜெல்லிபோல'' அந்த அரக்கன் இருந்ததாக டாக்டர் வால்போர்டு வருணித்தார். என்கண்ணுக்கு அதனுடைய எலும்பு, கண், மூக்கு, வாய் ஆகியவை எதுவும் தெரியவில்லை என்றார் அவர்.

"ஆனால் கண்ணாடித் திரவத்திலான ஒன்றைப்போல் அது ஆடிக்கொண்டே இருந்தது'' என்று அவர் கூறினார்.

★



முதற் பக்கத் தொடர்ச்சி

# தொழிற் கல்வியில்

யும் போது பாடத் திட்டத்தையும், ஒவ்வொரு கட்டமும் ஒரு முழுமையுடையதாக மாற்றி அமைக்க வேண்டும். ஒவ்வொரு கட்டத்திலும் வெற்றி பெறும் மாணவன் அதற்கேற்ற குறிப்பிட்ட தகுதி படைத்துமிருப்பான். பொறி இயல் துறைகளில் பல்வேறு உழைப்புக்கும் ஆட்கள் பயன்பட இதனால் இடமுண்டு.

ஒரு பக்கம் எஞ்சினீயர்கள் தேவையென்று அரசியல்வாதிகள் மேடைகளில் பிரசாரம் செய்து கொண்டிருக்கும் போது நாட்டில் பல பட்டதாரி எஞ்சினீயர்கள் வேலையின்றித் திண்டாடுவதாகச் செய்திகள் வருகின்றன. இந்த நிலையை மாற்றாமல் பயன்படாது.

நாயுடு அவர்கள் இந்த ஆண்டு தமது ஆறுவாரப் பயிற்சியில் தேர்ச்சி பெற்ற மாணவர்களுக்கு அத்தாட்சிப் பத்திரங்கள் வழங்குவதற்காக 22-8-63ல் தமது கோபால்பாக் மாளிகையில் ஒரு விழா ஏற்பாடு செய்த போது, வரவேற்புரையில் இந்தக் கருத்துக்களை வெளியிட்டார்.

கோவை மாவட்ட நீதிபதி எஸ். மகராஜன் அவர்கள் தலைமையில் நடைபெற்ற இந்த விழாவில், கலெக்டர் திரு. வெங்கடேசன் தேர்ச்சி பெற்ற மாணவர்க்கான அத்தாட்சிகளை வழங்கினார்.

நாயுடு அவர்கள் நமது நாட்டில் எத்தனை வகைகளில் செல்வமும், காலமும், பொருளும் வீணாகிறது என்பதைத் தமது வரவேற்புரையில் விளக்கிய போது, மோட்டார் பஸ்களை ஒரு சில ஆண்டுகளில் பழைய சாமானாக ஒதுக்கி விட்டுப் புதிய வண்டிகளைப் பயன்படுத்தும் முறையில் எவ்வளவு சேதாரம் ஏற்படுகிறதென்று விளக்கினார். புதுப்பித்த பஸ்களைக் கல்வி நிலயங்களுக்கு அவர் நன்கொடை வழங்கி அவை நன்றாகப் பயன்பட்டு வரும் உண்மையை விளக்கினார். இந்த விழாவிலும் ஆறு பஸ்களுக்கும் புது வலிவும் வனப்பும் கொடுத்து அவற்றை ஆறு கல்வி நிலையங்களுக்கு நன்கொடை வழங்கினார்.

இது வரையில் அவர் கான்வெண்ட் கிறிஸ்தவப் பள்ளிகளுக்கு மட்டுமே பஸ்களை நன்கொடை கொடுப்பது வழக்கமாக இருந்தும், இந்தத் தடவை இந்துக்கள் நடத்தும் இரண்டு கல்லூரிகளுக்கும் அவர் பள்ளிக்கூட பஸ்களை வழங்கியதை விழாத் தலைவர் மகராஜன் அவர்கள் குறிப்பிட்டு, நாயுடு அவர்கள் கல்வித் துறைக்குச் செய்து வரும் உதவிகளைப் புகழ்ந்துரைத்தனர்.

* *

திருச்சி சீதாலட்சுமி ராமஸ்வாமி கல்லூரிக்கு வழங்கப்பட்ட பஸ் நன்கொடையை, கல்லூரி ஸ்தாபகரின் சார்பாக நமது ஆசிரியர் திருலோக சீதாராம் பெற்றுக் கொண்டார்.

திருச்சி சீதாலட்சுமி ராமஸ்வாமி கல்லூரியைத் தாம் நேரில் சென்று கண்டு அதன் சிறப்பான நடைமுறையையும், ஸ்தாபகர் ராமசாமி அய்யர் தமது வாழ்நாளையும் செல்வத்தையும் பெண் கல்விக்கென்றே அர்ப்பணித்துத் தாமும் இருந்து அயராது உழைத்து வருவதையும் உணர்ந்ததுடன், நமது ராஜ்யத்திலுள்ள மிகச் சிறந்த ஸ்தாபனங்களில் ஒன்றென்று தாம் மதிப்பதாகவும் நாயுடு அவர்கள் கூறினார்.

விழாவில் அனைவருக்கும் விவசாயக் கல்லூரி முதல்வர் டாக்கடர் கிருஷ்ண மூர்த்தி நன்றி கூறினார்.

★



கிராமத்திலுள்ளவர்களுக்கு தபால் பட்டுவாடா செய்யும் காட்சியைக் காணலாம்.




ஊன்றிய கொள்கையும் ஒன்றே கணந்தோறும்
தோன்றும் கடமைகள் ஆற்றுதல் நன்றே

ஒலி 28 | 8—9—1963 | வாரம் 44

# என்ன மாறுதல் ?

★

பெரும் தலைவர்கள் ஆட்சிப் பொறுப்பை விட்டு, ஸ்தாபன வேலைக்குத் திரும்பியிருக்கிறார்கள். இதனால் ஏற்படுகின்ற மாறுதல் என்ன என்ற சிந்தனை உண்டாகிறது

முதலில் அரசாங்கத்தில் இதனால் ஏற்படுகின்ற மாறுதல் என்ன? அரசாங்க மந்திரிகளின் எண்ணிக்கைக் குறைவு ஓரளவு ஏற்படுகிறது. பொறுப்புக்கள் கை மாறுகின்றன. இதைத் தவிர அரசாங்கத்தின் கொள்கைகளில் மாறுதல் ஏதாவது உண்டா?

அமைச்சர்கள் சிலபேரை மெதுவாக வெளியேற்றுவதற்காகத் தான் இப்படி ஒரு வழி கண்டுபிடித்தார்கள் என்றும், இது ஏதோ அரசியல் நாடகமென்றும் சிலர் எழுதியும் பேசியும் வருகிறார்கள். குறிப்பாக, தேசாயின் தங்கக் கட்டுப்பாடு நாட்டைச் சீர்குலைத்து காங்கிரஸின் செல்வாக்கையும் கெடுத்துவிட்ட தென்றும், அவரை மெதுவாக வெளியேற்றத்தான் இப்படி ஏற்பாடு ஒன்றைக் கண்டுபிடித்தார்கள் என்றும் இவர்கள் விமர்சனம் செய்கிறார்கள்.

இந்த மேதைகளுக்கு அடிப்படையான தத்துவம் ஒன்று விளங்காமற்போனது தான் விந்தையாக இருக்கிறது. கூட்டுப் பொறுப்புள்ள மந்திரி சபைகளே நம்முடைய நாட்டில் இருக்கின்றன. ஒரு அமைச்சருடைய சொந்த சர்வாதிகாரம் எதுவும் இங்குக் கிடையாது. புதிய திட்டங்களும் கொள்கைகளும் மந்திரி சபைக் கூட்டங்களில் ஏற்றுக் கொள்ளப்பட்ட பிறகே அமுலாக்கப்படுகின்றன. எனவே தங்கக் கட்டுப்பாடு போன்ற அடிப்படைக் கொள்கை விஷயங்களில் தேசாய் தன்னிஷ்டப்படி செய்து விட்டதாகவோ, அது மற்றவர்களுக்கு தர்ம சங்கடத்தை உண்டாக்கி விட்டதாகவோ கருத, நியாயங்கிடையாது. அதற்காகச் சுற்றி வளைத்துச் சமாளிக்க வேண்டிய சங்கடமும் கிடையாது.

தேசாய்க்குப் பிறகு கிருஷ்ணமாச்சாரியார் வந்து விட்டதால் வரிக் கொள்கையோ, தங்கக் கட்டுப்பாடோ மாறிப் போகுமென்று மனப்பால் குடிக்க வேண்டிய அவசியமில்லை. தனி மனிதர்களின் ஆற்றலும் அறிவும் மாறுபடக்கூடு மென்பதற்கு மேல், கொள்கையளவில் தனிப்பட்டவர்களுக்கு ஒரு முக்கியத்துவமும் கிடையாது. எனவே அரசாங்கத்தில் பெரும் மாறுதல் எதையும் எதிர் பார்ப்பதில் பொருளில்லை.

அப்படியானால் பெருந் தலைவர்கள் வெளியேறியது அல்லது வெளியேற்றப் பட்டதன் விளைவு என்ன என்பது கேள்வி. இதற்கு சந்தேகத்துக்கு இடமில்லாமல் நமது மாபெருந்தலைவர் முதலமைச்சர் காமராஜ் தெளிவாக விடைகூறி விட்டார்.

பதவியிலிருந்து யார் வேண்டுமானாலும் நிர்வாகம் நடத்திப் போகலாம். ஆனால் மக்களின் மனம் அறிந்து அவர்களின் நம்பிக்கையும் பெற்ற தலைவர்கள் பதவிப் பொறுப்பில் இருப்பதை விட மக்களுடன் தொடர்பு கொண்டு அவர்களுக்கு வழி காட்ட வேண்டியது அவசியமாகி விட்டது.

எனவேதான் காமராஜ் போன்றவர்கள் முழு நேரமும் மக்கள் தொடர்புக்காக வெளியே வருகிறார்கள். காங்கிரஸ் கமிட்டிப் பொறுப்பு அல்லது மந்திரி சபைத் தலைமைப் பொறுப்பு என்பதெல்லாம் காமராஜை பொருத்த வரையில் முக்கியமான விஷயங்களே அல்ல.

அவர் எங்கிருந்தாலும் மக்கள் கூட்டம் அவரைச் சுற்றிக் கொண்டு தான் இருக்கும். ஊழியர்களும் அவருடன் இருப்பார்கள். மக்கள் தொடர்புக்கு என்ன முறைகள் கையாளப்படவிருக்கின்றன என்பதுதான் இனி தெரிய வேண்டியதாகும். எப்படியும் மக்களிடம் புதிய விழிப்பும் தேசீய உணர்ச்சியும் தோன்றும் நன் முயற்சிகள் எதிர் பார்க்க வேண்டியவையாகும்.

★

# கண்ணோட்டம்

— ரா. நா.

பொகாரோ எஃகு ஆலை திட்டத்தை நிறைவேற்ற இந்தியா அமெரிக்க உதவியை எதிர்பார்த்தது. இந்த உதவி குறைந்தது இன்னும் ஓராண்டிற்குக் கிடைக்காது என்பது தெரிந்து விட்டது. அமெரிக்க சட்டசபையினர் பொதுவாகவே அயல் தேச உதவியைக் குறைத்து விட்டனர். உலகத்தை யெல்லாம் கை தூக்கிவிட வேண்டும் என்பது அமெரிக்கர் தலை எழுத்தா என்று கேட்கின்றனர். பொகாரோ திட்டத்திற்கு உதவி மறுப்பு செய்ததற்கு இரண்டு காரணங்கள் கூறுகின்றனர். பல கோடி செலவாகும் பிரம்மாண்ட திட்டத்திற்கு தாங்கள் உதவலாகாது என்பது ஒரு காரணம். தனியார் துறை அடிப்படையில் அமைந்த அமெரிக்க சமுதாயத்தினர் பொதுவார் துறையில் அமையப் போகும் திட்டத்திற்கு உதவலாகாது என்பது இரண்டாவது காரணம்.

அமெரிக்க ஜனாதிபதி திரு. கென்னடிக்கு இந்த முடிவு மிகுந்த கோபத்தை அளித்துள்ளது. "குறுகிய நோக்குடன் பொறுப்பில்லாமல், கட்சி மனப்பான்மையுடன்" இவ்வாறு செய்து விட்டனர் என அவர் கூறுகிறார். இந்த மறுப்பின் மூலம் அமெரிக்காவின் பாதுகாப்புக்கே ஆபத்து என அவர் கருதுகிறார். இந்தியா போன்ற பிரம்மாண்டமான ஜனநாயக நாட்டிற்கு உதவி செய்வதை மறுத்தால் இத்திசையில் கம்யூனிஸ்ட் செல்வாக்கு ஓங்கிவிடுமே என அவர் அஞ்சுகிறார். மேலும் பிலாய் எஃகு ஆலை ருஷ்ய உதவியினால் செயல்பட்டு வருகையில் பொகாரோ திட்டத்திற்கு அமெரிக்கா உதவி செய்யாவிட்டால் இந்தியாவில் அமெரிக்காவின் மதிப்பு குறைந்து விடும் என அவர் பயப்படுகிறார். ஜனநாயகத்திற்கும் சர்வாதிகாரத்திற்கும் உள்ள முக்கியமான வித்யாசம் பிந்திய நாடுகளில் நினைத்த உடனே செய்ய முடியும். ஜனநாயக நாடுகளில் முடிவற்ற விவாதம் நடத்தி எடுத்த காரியம் வெற்றி அடையாமல் போய் விடும். இந்த தர்ம சங்கடமான நிலையிலிருந்து அமெரிக்க ஜனாதிபதியைக் காப்பாற்ற நமது பிரதமர் ஒரு யோசனை கூறியுள்ளார். நம்மால் அமெரிக்க ஜனாதிபதி சங்கடப்படுவானே என்று நாம் பொகாரோ திட்டத்திற்கு உதவி கோரி சமர்ப்பித்த விண்ணப்பத்தை வாபஸ் வாங்கி விடலாம் என்பது தான் அவர் யோசனை. இது ஒரு உத்தமமான யோசனை தான். நமது கனரக மந்திரியும் எப்படியும் பொகாரோ திட்டத்தை செயல் படுத்துவோம் என உறுதியாகத் தெரிவித்திருக்கிறார். நாம் யார் கையையும் நீடித்து எதிர்பார்த்தலாகாது. *

அமெரிக்காவில் ஜனாதிபதிக்குத் தலைவலியளிக்கும் மற்றோர் விஷயம் நீக்ரோக்களுக்கு சம உரிமை அளிக்கும் அவர் திட்டத்திற்கு வடக்கத்தி வெள்ளையர் விரோதமாயிருப்பது தான். வெள்ளையரும் கருப்பு மனிதர்களும் ஒரே பள்ளியில் படிக்கும் வாய்ப்பை வடக்கத்தி வெள்ளையர்கள் விரும்ப வில்லை. அன்பே உருவான ஏசு நாதர் மதத்தைப் பின் பற்றும் நாட்டில் இம்மாதிரி பாகுபாடு அனுஷ்டிக்கப்படுவது வருந்தத் தக்கது. கம்யூனிஸ்டு நாடுகளில் நிற இன வித்யாசங்கள் ஒடுக்கப்படுகையில் உலகத்தின் முதல் ஜனநாயக நாட்டில் இந்த இன வெறி இன்னும் இடம் பெற்றிருப்பது துரதிர்ஷ்ட சம்பவமாகும். *

தங்கள் உரிமைகளை நிலை நாட்ட சென்ற வாரம் லட்சக் கணக்கான நீக்ரோக்கள் வாஷிங்டனுக்கு பாத யாத்திரை சென்றனர். இம்மாதிரி தங்கள் உரிமைக்கு சாத்விகப் போராட்டம் நடத்துவதை 30 ஆண்டுகளுக்கு முன் பிளப்ராண்டால்ப் என்பவர் திட்ட மிட்டாராம். ஆனால் அந்த திட்டம் நிறைவேற வில்லை. இன்று அந்த சாத்விகமுறை வெற்றிகரமாகக் கையாளப்பட்டிருக்கிறது. 1857-ம் ஆண்டில் பிரடரிக்டக்ரிஸ் என்ற நீக்ரோ தலைவர் "போராட்டம் இல்லையேல் முன்னேற்றம் இல்லை. சுதந்திரத்தை விரும்புவதாகக் கூறுபவர்கள் கிளர்ச்சியை எதிர்க்கின்றனர். இப்படிப்பட்டவர்கள் நிலத்தை உழாமல் அறுவடை செய்ய விரும்புபவர்கள் போன்றவர்கள். அலை ஓசை இன்றி சமுத்திரத்தைக் கண்டு ஆனந்திக்க விரும்புவது போல்தான்" என கூறினார். சுதந்திரப் பாதையில் உலகிற்கு வழி காட்டிய அமெரிக்கர் இன வெறியை ஒழித்து சமத்துவத்திற்குப் பாடுபட வேண்டும்.

தமிழகத் தலைவர் திரு. டி. டி. கே. புதிய நிதி அமைச்சராகப் பதவி ஏற்று விட்டார். கீழ்க்கடை அதிகாரி செய்த தவறுக்காக தம் பதவியைத் துறந்த உத்தமர் மீண்டும் நிதி அமைச்சராகி விட்டார். அவருடைய நிர்வாகத்தில் வரி விதிப்பினால் அரசாங்கத்தின் மீது மக்களுக்குள்ள மனக் கசப்பு நீங்கும் என யாவரும் எதிர்பார்க்கின்றனர். மக்கள் மனம் குளிர அவர் நடந்துகொள்ள வேண்டும்.

காமராஜ் திட்டத்தினால் மத்திய மந்திரி சபையில் மாறுதல்கள் ஏற்பட்டு விட்டன. இதனால் மந்திரிகளின் எண்ணிக்கை குறைந்து விட்டது. ஆனால் பதவியிலுள்ள மந்திரிகளுக்கு வேலை பளுவும் பொறுப்பும் அதிகரித்து விட்டது. இதனால் நிர்வாக ஒழுங்கு பாதிக்கப்படாமல் இருக்க வேண்டும். மேலும் விலகிய மந்திரிகளுக்கு புதிய பொறுப்புகள் உடனடியாக அளிக்க வேண்டும். காமராஜ் திட்டம் பூரண பயன் அளிக்க வேண்டுமெனில் துரிதமாக காங்கிரஸ் ஸ்தாபனம் செயல் புரிய வேண்டும். *

## பளு தூக்கும் கிரேன்கள் உற்பத்தி

திருச்சி மாவட்டத்தில் வய்யம்பட்டியில் உள்ள அமராவதி தொழிற்சாலையில் கனமுள்ள பொருள்களை தூக்கி அமைப்பதற்கு உதவும் யந்திரங்களான கிரேன்களை உற்பத்தி செய்வதற்காக சர்க்கார் அனுமதி (லைசென்சு) அளித்திருக்கின்றனர். இந்த கிரேன்கள் துறைமுகங்களில் பளு தூக்குவதற்கு உதவுபவை. துவக்கத்தில் இந்த வார்ஃப் கிரேன்கள் 500 டன் பளு தூக்குவதற்கான வகையில் உற்பத்தி செய்யப்படும். இரண்டாவது கட்டத்தில் 1000 டன் பொருள்களையும் தூக்கக் கூடிய பெரிய அளவில் கிரேன்களை உற்பத்தி செய்யும் வகையில் அடிப்படை இடப்படும்.

இந்த ஆலையை திரு. டி. எஸ். சொக்கலிங்கம் நடத்துகிறார் என்று தெரியவருகிறது.

## தானாகவே மொழி பெயர்க்கும் இயந்திரம்

ஆங்கிலத்தில் பேசினால் இந்தியிலும், இந்தியில் பேசினால் ஆங்கிலத்திலுமாக தானே மொழி பெயர்த்துச் சொல்லும் கருவி ஒன்றைப் பாராளுமன்றத்தில் வைப்பதற்கான யோசனையை சபை அங்கீகரித்தது.

பாராளுமன்ற உறுப்பினர் ஒருவர் கேட்ட கேள்விக்கு, உணவுத் துறை அமைச்சர் திரு. ஏ. எம். தாமஸ் ஆங்கிலத்தில் பதில் கூறினார். துணை அமைச்சர் இந்தியில் பதில் கூறும்படி உறுப்பினரால் கேட்கப்பட்டதை யொட்டி, சபாநாயகர் திரு. உக்கும்சிங் இந்த தீர்மானத்தை ஒரு நிபந்தனையுடன் கொண்டு வந்தார். இந்தி ஆங்கிலம் இந்த இரண்டு மொழிபெயர்ப்பு மட்டும் அளிக்கப்படும் மற்ற மொழிகளிலும் மொழி பெயர்த்துச் சொல்ல வேண்டுமென்று உறுப்பினர்கள் கேட்பார்களேயானால், தாம் இத் தீர்மானத்தை வாபஸ் பெறுவதாகக் கூறினார்.

உறுப்பினர்கள் சபாநாயகரின் நிபந்தனைக்கும் சம்மதம் தெரிவிக்கவே தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. தீர்மானம் உடனடியாகவே சர்க்காருக்கு எடுத்துச் சொல்லப்பட்டு விரைவிலேயே மொழிபெயர்ப்பு எந்திரம் பாராளுமன்றத்தில் நிறுவப்படும் எனத் தெரிகிறது.

## திருவையாறு அருகே அதிசய வாழை

திருவையாறு அருகில் பொன்னாவரை என்ற கிராமம் இருக்கிறது. அந்த கிராமத்தில் ஸ்ரீ ராமலிங்கசுவாமி மடத்தில்। மாரியம்மன் கோயிலுக்கு எதிர்புறம் உள்ள ஒரு வாழை மரத்தில் பூமிக்குமேல் வாழை மரத்தின் அடியில் மரத்தை வெடித்துக் கொண்டு 4 தார்கள் பூவும் காயுமாக வெளிவந்திருக்கின்றன. இந்த அதிசய வாழை தெய்வீக சக்தி பெறப் பெற்று இருப்பதாக மக்கள் கருதி வழிபடுகின்றனர்.

## இக்கால இலக்கியம்

# 2. புதுக் கவிதையில் இயற்கை

— பி. கோதண்டராமன்

புதுக் கவிதையில் பல புதிய சக்திகள் தெளிவாக வெளிப்படுகின்றன. இவற்றுள், இயற்கையின்பால் கொள்ளும் நோக்கில் காணும் ஒரு மாறுதலும், கற்பனைக் காட்சி அடையும் நிறைவும் அந்தரங்கமும் ஆத்மா அனுபவிக்கும் நெருங்கிய அத்தியாத்மிகத் தோழமையும் மிக முன்னராகவே தோன்றிவிடுகின்றன. இயற்கையின் பார்வைகள், ஒலிகள், பொருள்கள், புலன்களில் அவை பதிக்கும் பதிவுகள், ஆகிய விவரங்கள் கற்பனையழகுடனும், அனுதாபத்துடனும், கவனமாகவும் நோக்கப்படுகின்றன. இக்காலக் கலை கவிதைகளின் நிலையான இயல்பு இது. பழைய கவிதையோ, இயற்கையை உணர்ச்சி ஏதுமின்றி வெறுமனே நோக்கியது. வாழ்க்கையினின்றும் சிந்தனையினின்றும் திரும்பிய பக்கவாட்டான கடைக்கண்பார்வையே அது. வாழ்க்கைக்குப் புறப்புலமாகவும் அலங்காரமாகவும், சிந்தனைக்கு வளம் தரும் ஒரு சாதனமாகவுமே அது பயன்பட்டது. இயற்கையை நம் அந்தரங்க உள்ளத்துணர்ச்சிகளுடன் தொடர்பு படுத்தும் போக்கு அதனிடமில்லை. இயற்கைக் காட்சியால் மானிட உள்ளம் எவ்வாறெல்லாம் நெகிழ்கிறது என்பதை அது வெகு அபூர்வமாகவே காட்டுகிறது.

ஆனால், இக்காலக் கவிதையிலோ, இத்துறைகளில் எல்லாம் நம் மனப்போக்கில் ஒரு மாறுதலும் நம் கற்பனையனுபவத்தில் ஒரு மகத்தான விரிவும் காண்கின்றன. இக்காலக் கவிக்கு இயற்கை ஒரு தனி சாந்நித்தியமாகிறது. அது தன் வாழ்க்கையைத் தழுவியுள்ள ஒரு சரிசமமான சக்தியாகும். அது அவனுக்கு ஒரு உலகம் முழுவதையுமே புதிதாகத் தோற்றுவிக்கின்றது. கவி இயற்கையில் தன் புறப்பார்வைக்கு எட்டாமல் மறைந்திருப்பதைத் தன் கற்பனையால் நுண்மையாகக் காண்கிறான். அவன் அதன் புறவுருவில் ஊடுருவி அதன் ஜீவனில் உறையும் அந்தரங்க உண்மையைக் கண்டு தன் கவிதையால் அதைப் புதிதாகப் படைக்கிறான்.

இங்ஙனமாக இயற்கையின்பால் அகத் தொடர்பு கொள்வது இக்காலக் கவிதையின் ஒரு சிறப்பியல்பாகும். இது இயற்கைக்கும் மானிடனுக்கும் இடையே ஒரு அனுபவ இணைப்பைப் படைக்கிறது. பிரபஞ்சமெங்கும் விளங்கும் விசுவ சக்திக்கு இக்கால முறையில் கூறும் பிரதியுத்தரமே இது. ஒரு பக்கம் இயற்கை தன்னுணர்ச்சியுள்ள மகத்தானதொரு ஜீவனாகவும், சாந்நித்தியமாகவும் விளங்குகிறது. அதற்கு உள நெகிழ்ச்சிகளும், மனோநிலைகளும் மனப் பதிவுகளும் உண்டு. வாழ்க்கையின் சங்கேதக் குறிகள் மூலம் அது அவற்றைத் தன்னிடம் வெளிப்படுத்திக் கொள்கிறது. கவிகள் அதை உணர்வுடையதாகக் கருதி அதன் சாந்நித்தியத்தை வெளிப்படுத்துகின்றனர். மற்றொரு பக்கம், உணர்ச்சியுள்ள மானிடன் உளம் நெகிழ்ந்தோ, உணர்ச்சியினால் தாக்கப்பட்டோ வெறும் அழகினால் கலங்கியோ, பிரதியுத்தரம் கூறுகிறான், அதாவது, அதற்கு இணங்குகிறான்.

அதன் பயனாக தனி மானிடனுக்கும் பிரபஞ்சத்திற்கும் ஓர் இணக்கமும் இசைவும் ஏற்படுகின்றன. சாதாரணமாக கற்பனையாலும், மன அறிவினாலும், உணர்ச்சியினாலும் இதற்கு வழி ஏற்படுகின்றது. இக்கருவிகள் மூலம் நெருங்கிய ஆத்மீகத் தொடர்பு ஏற்படுத்திக் கொள்ளவும் முயற்சி யொன்றும் செய்யப்படுகிறது. இயற்கையில் உறையும் ஆத்மீக சாந்நித்தியத்துடன் மானிடனின் ஆத்மா இசைவுற்று இணைகிறது.

இக்காலக் கவிதை மானிடனின் மற்றுமோர் விரிவான அனுபவத்தையும் எடுத்துக்காட்டுகிறது. மானிடன் தன்னைப் பற்றியே மேன்மேலும் அறிந்து கொள்கிறான். அவன் வாழ்க்கையின் பாவும் ஊடுமாயுள்ள காலத்தையும் இடத்தையும், தன் இறந்த காலம், நிகழ்காலம், வருங்காலம் ஆகியவற்றின் உட்பொருளையும் அறிந்து கொள்கிறான். அவனது அனுபவம் விரித்து கொண்டே செல்கிறது. இனத்தின் வரலாறு, வளர்ச்சி, சமுதாய ஜீவனும் அதன் வளர்ச்சியும் அதன் வருங்காலம் ஆகியன பற்றிய அறிவு பெருகிக் கொண்டே வருகிறது. பழங்காலத்தில் மானிடன் இத்துறைகளில் அதிக கருத்து செலுத்தவில்லை. தத்துவஞானம் வாழ்க்கைப் பிரச்னைகளுடன் தொடர்புற்றிருக்கவில்லை. விஞ்ஞானம் வெளித் தோற்றங்களை மேல்வாரியாக ஆராய்ந்து வந்தது. இக்கால மனம் பல தடைகளை மீறி விரிவடைந்துள்ளது. இயற்கையைப் போல மனிதனையும் அது விசுவ நோக்கில் ஆராய்கிறது. சரித்திர வரலாற்றில் மானிடன் பல்வேறு மாறுதல்களையும் அது ஆவலுடன் ஆராய்கிறது. நமக்கு இப்போது பரிச்சயமில்லாத பழம் பொருள்களையும், பழைய கால மானிடர், மத்திய கால மானிடர் நடத்திய தம் காலத்தில் வாழ்க்கையையும் அது சுவையுடன் ஆராய்ந்தும் கற்பனை செய்தும் நம் அறிவை விசாலப்படுத்துகிறது. இவை யாவும் பல வண்ணம் தோய்ந்த கற்பனைப் போக்குடைய இலக்கியத்தை வளர்த்தன. ருஸ்ஸோ, ஷத்தோ பிரியான், ஹயூகோ, கதோ ஷில்லர், ஹெய்ன், வொர்ட்ஸ்வர்த், பைரன், கீட்ஸ், ஷெல்லி முதலியோர் இக் கற்பனைப் போக்கு இலக்கியத்தின் பல்வேறு சாயைகளைப் போஷித்து வளர்த்தனர்.

★

### ஸ்ரீ ஸி. ஜே. பாண்டே தேர்வு

ஸ்ரீ சத்தியசரண் சாஸ்திரி காலமானதால் பார்லிமெண்ட் காங்கிரஸ் கட்சி நிர்வாகக் கமிட்டியில் ஏற்பட்ட காலி ஸ்தானத்திற்கு ஸ்ரீ ஸி. ஜி. பாண்டே தேர்ந்தெடுக்கப்பட்டார். ஸ்ரீ பாண்டே ஸ்ரீமதி அம்மண்ணராஜாவை (ஆந்திரா) 36 ஓட்டுகள் வித்தியாசத்தில் தோற்கடித்தார். *





கொலராடோ பல்கலைக் கழகத்தில் வெளிநாட்டு மாணவர்களுக்கு ஆலோசகராகப் பணியாற்றும் ஜார் ஹண்டரி, மாணவர் என். கிருஷ்ணமூர்த்தியுடன் பேசிக்கொண்டிருப்பதைக் காணலாம்.

# குருவுக்கு காணிக்கை

செம்டம்பர் 5-ந் தேதியன்று ஆசிரியர் தினம் கொண்டாடப்படுகிறது. அத்தினம் நமது ராஷ்டிரபதி டாக்டர் எஸ். ராதாகிருஷ்ணனின் பிறந்த தினமாக இருப்பது சிறப்புக்குரியது. நமக்கு எடுத்தறிவித்து நம்மை இன்றைய நிலைக்குக் கொண்டு வந்த ஆசிரியர்களுக்கு நாம் என்னென்றும் கடமைப்பட்டுள்ளோம்.

இக்கட்டுரையில், நாம் நமது ஆசிரியர்களுக்கு எவ்வளவு தூரம் கடமைப்பட்டுள்ளோம் என்பதைத் துணைக் கல்வி மந்திரி ஸ்ரீமதி சௌந்தரம் ராமச்சந்திரன் விளக்கியிருக்கிறார். ஆசிரியர் நல்வாழ்வு நிதிக்கும் ஏராளமாக நன்கொடை வழங்கி ஆதரிக்க வேண்டுமென்றும் அவர் கேட்டுக் கொண்டிருக்கிறார்.

குரு அல்லது ஆசிரியர், இந்தியாவில் மட்டுமின்றி உலக நாடுகளிலெல்லாம் தொன்றுதொட்டே பெரிதும் மதிக்கப்பட்டு வருகிறார். மலிவான புத்தகங்களும் அச்சுக்கூடங்களும் தோன்றுவதற்குமுன் ஆசிரியர்கள் நாட்டின் அறிவுக்களஞ்சியமாகத் திகழ்ந்து வந்தனர். குரு சீடன் அல்லது ஆசிரியர் — மாணவன் உறவு அன்னியோன்னியமாகவும் உயரியதாகவும் இருந்து வந்தது. மாதா, பிதா, குரு, தெய்வம், என்ற பழமொழி ஆண்டவனைவிட ஆசிரியருக்கே முதலிடமிருந்தது என்பதை விளக்குகிறது. ஆசிரியர்கள் சீடர்களின் கல்வியறிவைப் பெருக்கி ஒப்பற்ற ஒழுக்கசீலர்களாக வளர்த்தனர். ஆத்மீக விஷயங்களிலும், லௌகீகத் துறையிலும் அறிவைப் பெருக்கினர்; அது மட்டுமல்ல: மன்னனுக்கு அறிவுரைக் கூறி நாட்டுக்கே வழிகாட்டியாக இருந்தனர்; மன்னரவையில் மதி மந்திரியாக இருந்தனர்.

பழைய 'குரு—சீடர்' முறைகள் இன்று மாறிவிட்டன; இன்றைய ஆசிரிய மாணவ உறவைப் பழைய அளவுகோலைக் கொண்டு அளவிட முடியாது. எல்லாருக்குப் கல்வியென்ற கொள்கையும், ஜனநாயக நாட்டில் கல்வியறிவு பெறுவது ஒவ்வொரு பிரஜையுடையவும் பிறப்புரிமை என்ற கோட்பாடும் ஏற்றுக்கொள்ளப்பட்டிருப்பதே இதற்குக் காரணமாகும். மனித வரலாற்றில் இது ஒரு முக்கியமான நிகழ்ச்சி. அதன் காரணமாக மாணவர்களின் எண்ணிக்கையும், ஆசிரியர் எண்ணிக்கையும் வெகுவாக அதிகரித்துவிட்டன. ஆகவே ஆசிரியருக்கும் மாணவருக்குமிடையான அன்னியோன்னிய உறவு குறைந்துவருகிறது; ஆசிரியருக்கு மாணவர் மீதுள்ள பற்றும், பாசமும், மாணவருக்கு ஆசிரியர்பாலுள்ள மதிப்பும் மாண்பும் குறைந்து வருகின்றன. கல்வித் திட்டம் விஸ்தரிக்கப்படுவதால் ஆசிரியருக்கும், மாணவருக்குமிடையேயான நெருக்கமான நல்லுறவும் அபிமானமும் குறைய வேண்டு வேண்டுமென்பதில்லை. ஜனநாயக அமைப்பின் காரணமாகவும், கல்வி வளர்ச்சியின் விளைவாகவும் பற்பல நன்மைகள் ஏற்பட வேண்டும். மாணவர் எண்ணிக்கை உயர்ந்துள்ள போதிலும் ஆசிரியர் மாணவரிடையே நெருங்கிய நட்புறவை மீண்டும் மலரச் செய்து பழைய பிணைப்பை ஏற்படுத்த வேண்டியது மிக அவசியமாகும்.

### ஒழுக்கத்தை வளர்க்கவேண்டும்

பொதுமக்கள் இந்த அம்சத்தைப் பெரிதும் உணர்ந்திருப்பது மிகவும் வரவேற்கத்தக்கது; ஆசிரியருக்கும் மாணவர்களுக்கு மிடையே முன்பு நிலவிவந்த பற்றும் பாசமும் மதிப்பும் மரியாதையும் மீண்டும் உயிர்பெற்றெழுந்தால் ஒழிய, மாணவர்களின் கல்வியறிவையும் ஒழுக்க மேம்பாட்டையும் வளர்க்கமுடியாதுஎன்பதையும் மக்கள் உணர்ந்துவிட்டனர். பெற்றோர்களும், ஆசிரியர்களைப் பெருந்தன்மையாக நடத்தி அவர்களுக்குரிய மரியாதையைத் தரவேண்டும். சமூகத்திலும் ஆசிரியர்களுக்கு உயர்ந்த அந்தஸ்துவழங்கப்படவேண்டும். அதேபோல ஆசிரியர்களும் அத்தொழில் பக்தி சிரத்தையுடன் ஈடுபடுவதோடு மாணவர்களின் நலன்களிலும் நாட்டமுடன் ஈடுபடவேண்டும். அப்போதுதான் மாணவர்களின் மரியாதையையும் அன்பையும் பெறமுடியும்; பெற்றோர்களும், சமூகமும் ஆசிரியர்களுக்குக் கடமைப்பட்டவர்களாவார்கள். இந்த பரம்பர பொறுப்புகளை சமூகமும், ஆசிரியர்களும் உணர்ந்து பாராட்டி வருவது வரவேற்கத்தக்கதாகும்.

### சமூகத்தில் உயரிய இடம்

சமூகத்தில் ஆசிரியர்களின் வாழ்க்கைத்தரம் உயரவேண்டுமெனின் ஆசிரியர்களின் வாழ்க்கைத் தரம் உயரவேண்டும். அறிஞர்களெல்லாம் ஏழைகளே என்றமுதுமொழியை நினைத்துக் கொண்டு ஆசிரியர்கள் நல்வாழ்வுக்குப் பாடுபடாமல் இருந்துவிடக்கூடாது.

முன் காலத்தில், ஆசிரியர்களின் பிரச்சனைகள் அனைத்தையும், சமூகமே கவனித்து வந்தது; ஆசிரியர்களுக்கு நல் வாழ்வைத் தருவது இருபதாம் நூற்றாண்டிலுள்ள பெற்றோர்களின் புனித கடமை என்பதை உணரவேண்டும். சம்பளத்தை உயர்த்திவிட்டதால் மட்டும் ஆசிரியர்களின் அந்தஸ்து உயர்ந்துவிடாது.

பெற்றோர்கள் ஆசிரியர்களுக்குரிய அன்பையும், மரியாதையையும் செலுத்த வேண்டும்; ஆசிரியர்களும் தங்களுடைய கடமைகளைப் பெரிதாகப் போற்றி மாணவர்களின் நலனில் தீவிரமாக ஈடுபடவேண்டும்.

நமது ராஷ்டிரபதியாக இருக்கிற டாக்டர் எஸ். ராதாகிருஷ்ணனும், உபராஷ்டிரபதியாக இருக்கிற டாக்டர் ஜாகிர் ஹுஸெய்னும், புகழ்வாய்ந்த ஆசிரியர்களாவர். அது நமது நல்லதிருஷ்டமே. ஆனால் அது மட்டும் போதாது. சமூகம் தமக்கு மதிப்பையும், மரியாதையையும் தருகிறது என்பதை ஒவ்வொரு ஆசிரியரும் உணரும்படிச் செய்ய வேண்டும்; எதிர்காலப் பிரஜைகளை உருவாக்கும் பொறுப்பு இருக்கிறதென்பதையும் உணரவேண்டும்.

இந்தப்புனித உணர்வை வளர்ப்பதற்காகத்தான் ஆசிரியர் தினம் கொண்டாடப்படுகிறது. அத்தினம் ராஷ்டிரபதியின் பிறந்த தினமாகவும் இருப்பது மிகவும் பொருத்தமானதாகும். ஆசி ஆசிரியர்களிடம் அன்பையும், மரியாதையையும் செலுத்த வேண்டுமென்பதைப் பெற்றோரும் சமூகமும் இந்நாளில் நினைவு படுத்திக் கொள்ளவேண்டும்; அப்போதுதான் இளம் மாணவர்களும் அந்த மனப்போக்கைப் பெறுவார்கள். எதிர்கால சமுதாயத் உருவாக்குவதில் ஆசிரியர்களுக்கிருக்கிற உயரிய பங்கைப்பாராட்டும் வகையில் ஆசிரியர் நல்வாழ்வு நிதிக்குத் தாராளமாக உதவ வேண்டும்.

★

## பிறந்ததின வாழ்த்து.



ஜனாதிபதி டாக்டர் ராதாகிருஷ்ணனின் 75-வது பிறந்ததினத்தன்று பல்லாண்டு வாழ்க என வாழ்த்துகிறோம்.



வாஷிங்டன் நகரிலுள்ள அமெரிக்கன் பல்கலைக் கழகத்தில் படிக்கும் வெளி நாட்டு மாணவர்களில் ஒரு சிலர்; இவர்களில் இருவர் இந்தியர், இடமிருந்து இரண்டாவதாக உள்ளவர் ஸால்மன் மாலப்பா; நான்காவதாக உள்ளவர், ரத்ன சேஷப்பா.

★

கோலார் தங்க வயலுக்கு

## மண்வவாரி இயந்திரம்

மைசூர் ராஜ்யத்தில் கோலார் தங்க வயலில் கனரக மண்வாரி இயந்திரமொன்றை நிறுவும் பொறுப்பை ஹிந்துஸ்தான் விமான உற்பத்தி, தொழிற்சாலையிடம் ஒப்படைத்திருக்கிறது. இதற்கு ரூ. 12 கோடி செலவாகும். இதனை நிறுவ நிலத்தை ஆர்ஜிதம் செய்வதற்கும் மைசூர் சர்க்கார் கமிட்டியொன்றை நிறுவியிருக்கிறது.

# வித்தைப் பொறுத்தே ஆகுமாம் விளைச்சல்

விவசாயத்தில் முன்னேற்ற மடைந்த நாடுகளில் விவசாயத்துக்கு வித்துக்களுக்கு பெரும் முக்கியத்துவம் தந்துள்ளார்கள். விளைச்சலின் உயர்வானது வித்துக்களின் உயர்வைப் பெரிதும் பற்றி நிற்கிறது. ஒவ்வொரு வித்துக்கும் விளைய வாய்ப்பளிக்க வேண்டும், விளையத் திறனற்ற வித்தை வயலில் இடக் கூடாது என்பது நல்ல விவசாயிகளின் கொள்கை.

விதைகளின் பல குறைபாடுகள் குற்றங்கள் இருக்கலாம். விதைகளில் பல ராசிகள் கலந்திருக்கக் கூடும். விளையத் திறனற்ற சத்துப்போன விதைகள் இருக்கும். கடந்த பயிரிலிருந்து நோயை தூக்கி வந்து அடுத்த பயிருக்கு பிதுரார்ஜிதமாக அளிக்கும் விதைகள் இருக்கலாம். இத்தகைய வித்துக்களை விதைப்பதால் செலவும், எருவும், பயிரும், பாசனமும் வீண்தானே.

விதைவழி பயிருக்கும் மகசூலுக்கு வரக்கூடிய குறைகளை நிவர்த்திக்க அரசாங்கம் ஒவ்வொரு மாவட்டத்திலும் விவசாயப் பண்ணைகளை ஏற்படுத்தியுள்ளார்கள். இப் பண்ணைகள் சுமார் 25-30 ஏகரா விஸ்தீர்ண முடையவை. ஆராய்ச்சி நிலையங்களில் சுத்த ரகங்களாகவும், நோய் நொடி இல்லாமலும், நிலவாகுகள், பட்டம், பாசன வசதி இவைகளுக்கு ஏற்றவையுமான அபிவிருத்தியான மூலாதார வித்துக்களை உருவாக்கி அப்படி உருவாகிய விதைகளை மாவட்டங்களின் தேவைக்கு ஏற்ற வித்துக்களை மாவட்ட அரசாங்க விதைப் பண்ணைக்கு அனுப்புவார்கள். இங்கும் பெருக்கு விதைகளை கலப்படம் வராமல் நோய் நொடி தாக்காமல் கவனத்துடன் பெருக்குகிறார்கள்.

கிராமங்களுக்கு எந்த ரக விதை எவ்வளவு தேவைப்படும் என்று கணக்கிட்டுக் கொண்டு கிராமத் தேவையைப் பூர்த்தி செய்ய வித்துக்கள் மறுபடி கிராம வித்துப் பண்ணைகளில் மேலும் பெருக்கப்படுகின்றன.

கிராம விதைப் பண்ணையில் செய்யப்படும் விதைப் பெருக்கமும் மிக கவனத்துடன் செய்யப்படுகிறது.

பஞ்சாயத்துக்கள் கிராம சஹாயக் குழுகளை தேர்ந்தெடுக்கின்றனர். இங்கு ஒரு விஷயம் நினைவில் இருக்க வேண்டும். கிராம சேவக் என்பவர் வேறு, கிராம சஹாயக் என்பவர் வேறு, கிராம சேவக் அரசாங்க ஊழியர், கிராம சஹாயப் பெருக்கு விதைகளைத் தம் வயலில் பெருக்கி இதர விவசாயிகளுக்கு விநியோகம் செய்யும் பணிக்கு உதவியாக இருக்க தேர்ந்தெடுக்கப்பட்ட நாணயமுள்ள, முற்போக்கான விவசாயி, அரசாங்க ஆராய்ச்சி நிலையங்களும், மாநில விதைப் பண்ணைகளும் உருவாக்கிய ஆதார வித்துக்களை இவர் இரண்டாம் தடவை பயிரிட்டு விதைப் பெருக்கம் செய்து குடியானவர்களுக்கு கொடுக்கிறார்.

பெருக்கு விதையானது நஞ்சை புஞ்சை நிலங்களுக்கு மொத்தமுள்ள பரப்பில மூன்றில் ஒரு பாகத்துக்குப் போதுமான அளவுக்கு ஒவ்வொரு ஆண்டும் கிராம சஹாயக் இதர விவசாயிகளுக்கு கொடுப்பார். பெருக்கு விதைகளை மூன்றாண்டுக்கு ஒரு தடவை புதுப்பித்துக் கொண்டால் தான் நல்ல பயன் கிடைக்கும்.

இல்லாவிடில் கலப்படம், நோய்நொடி வரவு ஹேதுண்டு இதை உத்தேசித்து ஆண்டுக்கு ஊர் நிலப்பரப்பில் மூன்றில் ஒன்றுக்கு வேண்டிய அபிவிருத்தி செய்யப்பட்ட பெருக்கு வித்துக்கள் கிராம விதைப் பண்ணை மூலம் விநியோகிக்கப் படுகிறது.

விதைப் பண்ணைத் திட்டம் விவசாயத்துக்கே ஒரு வரப் பிரசாதம் விளைச்சல் போட்டியில் பரிசு பெறும் விவசாயிகள் ஒருமுகமாக பெருக்கு விதை வழங்கும் திட்டத்தைப் பெரிதும் போற்றி வருகிறார்கள்.

உயர்தர விவசாயம் செய்து உச்சமான மகசூல் பெற விரும்பும் விவசாயிகளுக்கு பெருக்கு வித்துக்களை இன்றியமையாதது. நற்சாட்சிப் பத்திரம் பெற்ற விதைப் பண்ணை விதைகளை வாங்கிப் பயிரிடுவதால் விவசாயிகள் லாபமடைகிறார்கள்.

"போட்ட வித்து பூரா விளைஞ்சால்தான் விவசாயத்தில் புண்ணியமுண்டு" என்றார் நான் கண்ட ஒரு விவசாயி.

அதுதான் எவ்வளவு உண்மை.

## பூஸா ஜெயன்ட் அன்ஜான்

### புது ரகத் தீவனப்புல்

பூஸா ஜெயன்ட் அன்ஜான் என்பது புதுரக தீவனப்புல். இதைப் புது தில்லி இந்திய விவசாய ஆராய்ச்சி நிலையத்தார் உருவாக்கியிருக்கின்றனர். இது ஒரு இருபிறவி இனப்புல் மழைக்கால பயிராகச் சாகுபடி செய்ததில் நிலையத்து வயலில் ஏகர் ஒன்றுக்கு மகசூல் 25,000 கிலோ கிராம் கண்டது. சாதாரண அன்ஜான் புல் தரும் மகசூலை விட இது இரண்டு பங்குக்கும் அதிகமானது.

இந்தப் புல்லின் தண்டு மென்மையானது, ரசமுள்ளது, புஷ்டி தரக்கூடியது, ருசியுள்ளது. புல்வெளிகளில் பயிரிட ஏற்ற வகை இது.

இரண்டு மாதத்திற்கு ஒரு அறுவடையாக ஆண்டில் ஆறு தடவைகள் அறுவடை செய்யலாம். ஒவ்வொரு அறுவடைக்குப் பிறகும் இந்தப் புல் விரைவில் வளருகிறது.

விதை மூலமோ வேர் பதியம் மூலமோ இப்புல்லை வளர்க்கலாம். மாரிகாலம் வந்ததும் விதையை வயலில் தெளிக்க வேண்டும்.

விதையோ வேர் பதியமோ வேண்டுவோர் கீழ்க்கண்ட விலாசத்துக்கு எழுதிப் பெற்றுக் கொள்ளவும்: ஹைட் ஆப் திடிவிஷன் ஆப் பாடனி, இந்தியன் அக்ரிகல்சரல் ரிசர்ச் இன்ஸ்டிட்யூட், புது தில்லி.*



மாயவரம் வட்டாரத்தில் ஒரு கிராம விதைப் பண்ணையில் பொன் மணி சுமந்து அறுவடைக்குத் தயாராக இருக்கும் அமோகமான வித்து நெற் பயிர்.

## புது ரக உ.பி. சோளம்

### நல்ல மகசூல் தரக்கூடியது

உத்திரப் பிரதேச மாநிலத்து விவசாய இலாக்கா ஒரு புது ரகச் சோளத்தை உ.பி. விவசாயிகளுக்கு உருவாக்கி அளித்துள்ளது. இதன் பெயர் டி. 4. இது நிரம்ப மகசூல் அளிக்கக் கூடியது.

இது இரட்டைத் தானிய விதை. 140 தினங்களில் முதிர்கிறது. விதைகள் தட்டையாகவும், கனிசமாகவும், பால் வெள்ளை நிறமாகவும் இருக்கும். சுவையான சப்பாத்திகளை இதன் மாவைக் கொண்டு செய்யலாம்.

வரிசை நடவால் நல்ல பயன் தருகிறது. உ.பி. மத்தியப் பிராந்தியத்திலும், வண்டல் பிரதேசத்திலும் பயிரிடலாம். மத்தியப் பிரதேசத்தில் தானியத்துக்கும் வண்டல் பிரதேசத்தில் தீவனத்துக்கும் பயிரிடலாம்.

டி. 8பியைக் கூட டி. 4பி தானிய மகசூல் தீவன மகசூல் இரண்டிலும் வென்று விட்டது.

★

## வரட்சி நிலப் புதர் நல்லதோர் தீவனம்

நரியிலந்தை ஓர் முட்புதர். வரட்சிப் பிரதேசங்களில் தீவனம் கிடைக்காத காலங்களில் இதன் இலைகளை பிராணிகளுக்குத் தீவனமாகப் பயன்படுத்தலாம். பஞ்சாப, ராஜஸ்தான் போன்ற, இதர இவை போன்ற பிரதேசங்களில் இவ்வாறு நரியிலந்தையைப் பயன்படுத்தலாம் என்று ஜோத்பூர் மத்திய பிரதேச ஆராய்ச்சி நிலையத்தார் கூறுகிறார்கள்.

நரியிலந்தை இலையில் புரதமும், தாதுப் பொருள்களும் நிரம்ப இருக்கின்றன. இந்தச் செடி வரட்சியைத் தாங்கி வளரக்கூடியது. தீ, அதிக மேய்ச்சல் இரண்டையும் கூட தாங்கி வளரக் கூடியது.

மழை வந்ததும் விதைகள் விதைத்தோ அல்லது அல்லது ஒரு வயதான நாற்றுகளை நட்டோ இதைப் பயிரிடலாம். சாதாரண அளவுக்கு மழை பெய்யும் ஆண்டுகளிலும், மணற்பாங்கான இடங்களிலும் நாற்றுகள் எல்லாம் அநேகமாகப் பலித்து விடுகின்றன.

ஜனவரி-பிப்ரவரியில் நரியிலந்தை இலைகளை அறுவடை செய்ய வேண்டும். ஒரு ஹெக்டரில் (2½ ஏக்கரில்) நிலம் மட்டமாக இருந்தால் கூட 150 கிலோ கிராம் காய்ந்த இலை கிடைக்கும்.*

## அருள் வாக்கு

ஆசையற்றவிடத்து ஆனந்தம் மிளிர்கிறது.

தனக்குரிய அனைத்தையும் பிறர்க்குரியதாக்குபவன் பரம் பொருளுக்கு உரியவன் ஆகிறான்.

மனிதனது முன்னேற்றத்திற்கு இன்பம் உதவுவதை விட அதிகமாகத் துன்பம் உதவுகிறது.

அரியலூர் டி.மு.கோ.
O. S. 473/63

மருத உடையார் தனக்கும் மற்ற Creditores சார்பிலும் — வாதி
ரெத்தினம்மாள் and Vs பாப்பாள் ஆச்சி முனிய செட்டியார் – பிரதிவாதிகள்

அ.டி.மு.கோ S. C. 1475/61-ல் E.A. 1324/62-ல் ஏற்பட்ட Claim order ஐ ரத்து செய்ய இந்த வாதியால் மற்ற எல்லா Creditors சார்பிலும் தாவா துடரப்பட்டு இருப்பதால் இது விஷயத்தில் கக்ஷி இருப்பவர்கள் 23-9-63-ல் ஆஜராகி தெரிவித்துக் கொள்ளலாம்.

B. வெங்கடாசலம் பிள்ளை,
1 | 5705 | 74 வக்கீல்.

அரியலூர் டி.மு.கோ.
S. C. 855/63.
E. A. 82/63

கோவிந்தசாமி படையாச்சி என்கிற கோவிந்த படையாச்சி — வாதி
ராஜமாணிக்கப் படையாச்சி — பிரதிவாதி

ஷெ நெம்பரில் வாதி புரோநோட்டுப்படி ரூபாய் 198-05 கிடைக்க தாவா செய்து 17-9-63-ல் ஈரங்கி என்கிற விபரம் தெரிவித்துக் கொள்ளப்படுகிறது.

M. அருள்நந்தி,
2/5706/75 அட்வகேட்.

# விவசாய வெற்றிக்கு சில நுட்பங்கள்

தீவிரச் சாகுபடி செய்யச் செலவும் சிரமும் தீவிரமாகத் தானே செய்ய வேண்டும், ஆகையால் உற்பத்திக்கு எந்த ஒரு சிறு குந்தகம் வரினும் அது லாப வரம்பை வலுவாகத்தாக்கி பெரிய விள்ளலை ஏற்படுத்தி விடுகிறது.

வேளாண்மைக்குப்பணிப் பெண்ணாய் இன்று விஞ்ஞானம் ஆகிவிட்டபோது சாகுபடியில் நேரும் குந்தகங்களை நீக்கிக் கொள்ள விஞ்ஞான முறை விவசாயத்தை விவசாயிகள் பின்பற்ற வேண்டும். நாற்றங்காலைத் தயாரிப்பது முதல் விளைந்த பண்டத்தை விற்பனை செய்யும் வரை திருந்திய முறைகளை விவசாய விஞ்ஞானிகள் வகுத்துக் கொடுததுள்ளார்கள்.

அவைகளில் சில கீழே தரப்பட்டுள்ளன.

### வயல்

அறுவடையான கையோடு நிலத்தை உழுது போடுவது நல்லது. நிலத்தின் நைப்பு இதனால் காக்கப்படும். வயல் வாழ் நோய் பூச்சிகள் மடியும்.

ஆனால் ஈரப் பதமான நிலத்தை உழாதீர்கள். வரப்புகளை ஒழுங்காக அமையுங்கள். இவ்வாறு வரப்பைச் சீர்திருத்துவதால் மழை பெய்தால் வெள்ளம் வரப்பை உடைத்துக் கொண்டு ஓடி நில மண் அரிப்பு ஏற்படாமல் இருக்கும்.

வயலில் அறுவடையான கூளங்கள், வரப்புகளில் தோன்றும் தகரை, எருக்கு, காட்டாமணக்கு போன்ற செடிகள் இவைகளைக் கழித்து தூர எறியாமல் உங்கள் எருக்குழியில் இடுங்கள். இந்தப் பூடுச் செடிகள் எப்படி வளர்ந்தன தெரியுமா? காற்றில் உள்ள கரிம், நைட்ரஜன் சத்துக்களையும், பூமியில் உள்ள சத்துக்களையும் இழுத்துத் தானே! இவைகளைப் பூமிக்கு இட்டால் செடிகள் தமக்காக உண்ட உரப் பலனை பூமிக்குக் கொடுத்து விடுமே! அதற்காகவே தழைகளை எருவாக்கிவிட வேண்டும். ஆகையால் தவறாமல் இத்தகைய அரிதாள்கள், தாவரக் கழிவுகள் முதலியவைகளை மேற்படாமல் உங்களுடைய கம்போஸ்டு குழிக்கு செலுத்தி விடுங்கள், தழை சிறிது சிறிதாகச் சேர்ந்தாலும் மொத்தப் பலன் கணிசமாகவே இருக்கும்.

### விதைப்பு

விதையைப் பொறுத்தே பயிர். இந்த உண்மை விவசாயிகளின் மனதில் ஆழப் பதியவேண்டும். சொத்தை வித்தை வைத்துக்கொண்டு பாதாளம் வரைப் பறண்டி உழுதாலும், மலை மலையாக எருவடித்தாலும் யாது பயன்? ஆகையால் அத்தாட்சி பெற்ற அபிவிருத்தியான பொறுக்கு வித்துக்களைப் பயன்படுத்துங்கள்.

விதைகளை அபிவிருத்தி செய்யும் விஞ்ஞானம் மிகவும் முன்னேறி விட்டுள்ளது. விவசாய இலாகா உயர்ந்த வித்துக்களை உண்டாக்கி கிராம வித்துப் பண்ணைகள் மூலம் விநியோகம் செய்கிறது. விதை விலை கூடுதலாகத் தோன்றினாலும் இறுதிப் பலனைப் பார்த்தால் விதை விலையின் கூடுதல் ஒரு கூடுதலே இல்லை என்று உணர்வீர்கள்.

பட்டம் விட்டு விதைப்பின் பட்டபாடு வீண். சாகுபடியில் பருவம் செய்யும் உதவி பதுங்கியிருந்தாலும் அளவற்றது. பருவத்தே பயிர் செய் என்ற பழம் சொல் என்றும் புதுக் கருத்துள்ள சொல்லல்லவோ!

ஆற்றில் பெருக்கு வர தாமதமாகி நாற்று விடாமல் இருக்க வேண்டிய அவசியம் இல்லை இப்போது. சர்க்கார் தரும் கடனுதவி கொண்டு வடிமுனைக் குழாய்களை வசதியுள்ள ஊர்களில் பொருத்திக் கொண்டால் ஆற்றில் பெருக்கு வரு முன்னரே நாற்றை வளர்த்து விடலாம். கோடைப் பயிர்களும் செய்யலாம்.

உங்கள் விவசாய அதிகாரியை இது பற்றி விசாரியுங்கள்.

### செய் நேர்த்திகள்

சமன்பாடுள்ள உரங்களை உங்கள் கிராம சேவக் அல்லது விவசாய அதிகாரியை விசாரித்து தெரிந்து கொண்டு அளவாகவும் உரிய காலத்திலும் உரிய முறைப்படியும் போடுங்கள். அளவுக்கு மீறி உரமிடுவதால் செலவதிகம். உரிய காலத்தில் இட்டால்தான் பயிர் ஏற்ற பலனை அடையும். உரப்பசி பயிருக்கு இப்போதுதான் உண்டு என்று கணக்குண்டு. பயிருக்குப் பயிர் நிலத்துக்கு நிலம் அளவு காலமும் வேறுபடும். இவைகளை உங்கள் விவசாய அதிகாரி நன்கு அறிவார். ஆகையால் உங்களுக்குத் தெளிவாகக் கூறுவார். மேலும் உரத்தை இப்படித்தான் இடவேண்டும் என்ற முறையுண்டு அதையும் புரிந்துகொள்ள வேண்டும். பல விவசாயிகள் அளவு தெரியாமலும், போடும் பக்குவம் பருவம் தெரியாமலும் உரமிட்டு விட்டுப் பிறகு பயிர் விளையவில்லையே என்று பழியை உரத்தின் மீது நவீன முறைகள் மீதும் சுமத்துவதை நீங்கள் பார்த்தும் கேட்டும் இருப்பீர்கள்.

பயிருக்கு பகைவர் பல. நோய்கள், பூச்சிகள், பூஞ்சனங்கள், எலிகள் என்று அநேகம். இவை விவசாயிகளின் கொடூரமான, அனுதாபமற்ற பங்காளிகள், இவைகளை ஒழித்துக்கட்ட விஞ்ஞானம் வழிகள் பிறபித்துள்ளது. பூச்சி பூஞ்சனங்களை கொல்ல அவைகள் யாவை. எப்படி கண்டு பிடிப்பது என்று அனுபவ மூலமும், விவசாய இலாகா அவ்வப் பொழுது வெளியிடும் துண்டுப் பிரசுரங்கள் மூலமும், கிராம சேவக், விவசாய அதிகாரி முதலியவர்களைக் கேட்டும் திருத்தமாகத் தெரிந்து கொண்டு எந்த மருந்துகளை எப்படி, எப்போது, எந்த அளவில் பயன்படுத்த வேண்டும் என்று தெரிந்து கொள்ளுங்கள்.

பூச்சிகள் வரும் வரை காத்திருக்க வேண்டாம். வருமுன் காப்பாக பல மருந்துகளைப் பயன்படுத்திப் பலன் பெறலாம்.

பயிருக்குப் பாவிகளை நெல்லுக்கிறைத்த நீர் புல்லுக்குப் பாயும் என்று கேட்டிருப்பீர்கள். நீங்கள் வார்க்கும் நீரும் உரமும் தாவரக் கொள்ளைக்கூட்டங்களான புற் பூண்டுகளுக்கா போக வேண்டும்? அவ்வப் பொழுது களையை நீக்கினால் உரமும் நீரும் பயிருக்கே அடையும். வரிசை நடவால் களையெடுப்பது எளிது. உரம் பயிர்களுக்கு சமமாக கிடைக்கும்.

அறுவடையான பொருளையும் பூச்சி, பூஞ்சனம் பற்றிக் கொள்ளாமல் நல்ல களஞ்சியங்கள், சேமிப்பு அறைகள் இவைகளில் வைத்துக் காப்பாற்றி வையுங்கள்.

பண்ணைச் செலவு வரவு கணக்கைத் திருத்தமாகக் கணக்கெடுக்கவும். இதனால் எப்படி செலவை குறைக்கலாம், எந்த வகையில் ஏற்றினால் அதிக மகசூலுக்கு வகையுண்டு என்று தெரிந்து கொள்ளலாம்.

இவையாவும் செலவு மிக்க வேலை என்று சிலர் தவறாகக் கருதலாம். ஆனால் இவைகளில் சிக்கனம் செய்வதால் வரும் நஷ்டத்தையும், இவைகளில் தாராளமாக இருப்பதால் வரும் லாபத்தையும் ஆய்ந்து பார்த்தால் மேற்கூறிய முறைகளைப் பின்பற்றுவதால் வரும் செலவை நீங்கள் பொருட்படுத்த மாட்டீர்கள்.

பண்ணையில் ஆண்டு முழுதும் அலுவல்' இல்லாமல் இருக்கலாம். துணைத்தொழிலாகக் குடிசைத் தொழில் பொருள்களை செய்தால் மிக்க பொருள் ஈட்டலாம்.

சுருங்க கூறுமிடத்து உயர்ந்த விவசாய வெற்றிக்கு (1) அறுவடையானதும் வயலை உழவும் (2) வரப்பைச் சீர் செய்யவும் (3) உரங்களை கம்போஸ்டு செய்யவும் (4) பொறுக்கு விதைகளைப் பயன்படுத்தவும் (5) பட்டத்தில் விதையுங்கள் (6) களையெடுங்கள் (7) சமபாடுள்ள உரங்களை கிராம சேவக், விவசாய அதிகாரியை கேட்டறிந்து போடுங்கள் (8) மருந்துகளைப் பயன்படுத்து பூச்சி, பூஞ்சனம் எலி இவைகளை அகற்றுங்கள் (9) அறுவடையான பொருளை செவ்வையாக சேமியுங்கள் (10) துணைத் தொழிலில் ஈடுபட்டு உபரி வருமானம் பெறுங்கள் (11) கிராம சேவக் விவசாய அதிகாரியை ஆலோசனை கேளுங்கள்.

★

## மஞ்சள் பயிரின் இலைப் புள்ளி நோய்

மஞ்சள் பயிரைத் தாக்கும் இலைப்புள்ளி நோயை போர்டோக் கலவை அல்லது டைதேனைப் பயன்படுத்தி கட்டுப்படுத்தலாம்.

போர்டோக் கலவையை இரண்டு தடவைகள் அடித்தால் நோயைக் கட்டுப்படுத்தப் போதுமானது என்று தமிழ் நாட்டில் நடத்திய சோதனைகள் மூலம் தெரிய வந்தது. டைத்தேனும் இந்நோயைக் கட்டுப் படுத்தக்கூடியது. ஒரு ராத்தல் டைதேனை 60 காலன் தண்ணீரில் கரைத்து அடித்தால் ஒரு ஏக்கருக்கு மருந்தடிக்கப் போதுமானது.

★

**காட்டுக் கூட்டுறவு சங்கம்**

## பஞ்சாபில் நூதன சோதனை

பண்ணைக் காட்டு வளர்ப்பில் பஞ்சாபில் காங்ரா மாவட்டத்தில் ஒரு நூதனமான சோதனை செய்யப் பட்டு வருகிறது. அந்த இலாக்காவிலுள்ள காடுகளைப் பாதுகாக்கவும், அபிவிருத்தி செய்யவும், புனருத்தாரணம் செய்யவும் விவசாயிகள் கூட்டுறவுக் காடு வளர்ப்புச் சங்கங்களை அமைத்துக் கொண்டிருக்கிறார்கள். இத்திட்டம் கிட்டத்தட்ட 70 கிராமங்களில் அதாவது 60,000 ஏக்கரில் நடைபெறும்.

★



அமெரிக்கா செல்லும் மாணவர்களுக்காக அண்மையில் புதுடில்லியில் நடந்த ஒரு கருத்தரங்கில் அமெரிக்காவில் மாணவர் வாழ்க்கை எத்தகையது என்பது பற்றிப் பேசுகிறார் (நிற்கும்) டாக்டர் எஸ். பி. லூத்ரா. இவரும் அமெரிக்காவில் மாணவராக இருந்தவரே.



Edited & Published by its owner Sri. Triloka Sitaram & Printed by him at his Shivaji Newsprinters, 24, A-Theradi Bazaar, Tiruchy-2.
Annual Subscription Including 4 Special Numbers: Individuals Rs. 5 Institutions Rs. 10. Single copy six nP. (Madras office: 12/2, Nallathambi Mudali St., Triplicane, Madras-5.)